# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – வைகாசி

2021 – மே

30.04.2021 அன்று நடைபெற்ற சீர் வளர் சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் அவர்களின் 81ஆவது பிறந்தநாள் விழா நிகழ்வு

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – வைகாசி

2021 – மே    இதழ் – 107

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ்    ரூ **10.00**
ஆண்டுச் சந்தா    ரூ **100.00**

உ
சிவமயம்




# இறை வணக்கம்

முத்துராமலிங்க ஆண்டவர்

மேயபெரும் கழனிநகர் கோயிலூர் எனும்பேர்

மேவஇறை ஆலயத்தை விரித்தஅருட் பெரியோன்

பாயபுனல் திரண்டு ஆலியாயதெனச் சுத்தப்

பரப்பிரமம் இவ்வுருக்கொண்டு உற்றதெனும் புரணன்

ஆயபுகழ் வேதாந்த சிரவணம் செய்து உலகில்

அளவிலர் சைதன்னியம் ஆகப்புரிந்த அறவோன்

தூயமுத்தி ராமலிங்க தேசிகன் என்று உரைக்கும்

சோதிலிங்க சொரூபன் எனும் சோதியை ஏத்தெடுப்பாம்.

*– கோயிலூர்ப் புராணம்*

## ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

எல்லாப் பொருட்களாலும் நன்மையும் உண்டு தீமையும் உண்டு. கைபேசி (Mobile phone) மூலம் தற்போது சமுதாயத்திற்குப் பலபல அரிய நன்மைகள் கிடைக்கின்றன. எந்தப் பொருளைப் பற்றி வேண்டுமானாலும் நொடிப்பொழுதில் முழு விபரமும் அறியக்கூடிய அரிய வசதி இணையத்தின் மூலமாக நமக்குக் கிடைக்கின்றது. அதே சமயம் இணையத்தின் உறுப்புகளான Facebook, Whatsapp, Youtube அனைத்தின் வழியாக எவ்வளவு நன்மைகள் கிடைக்கின்றனவோ அவற்றிற்குக் குறையாமல் தீமைகளும் உள்ளன. தடம் மாறினால் உள்ளம், சிந்தனை, ஒழுக்கம் அனைத்தும் கெடக்கூடிய வாய்ப்புகள் அதிகம் உள்ளன.

மேலே சொன்ன உதாரணத்தைப் போல இன்று உலக சமுதாயமே அஞ்சி நடுங்கி அலறிப் பதைபதைத்துக் கொண்டு இருக்கும் கொடூரத் தொற்று நோய் கொரோனா. கோடிக்கணக்கான மக்களின் உடல் நலத்தைக் கெடுத்து அதில் லட்சக்கணக்கான மக்களின் உயிர் அழிக்கச் செய்து ருத்ரதாண்டவம் ஆடும் கொர்ரோனா பரவலாலும் சமுதாயத்தில் பல நன்மைகள் கிடைத்துள்ளன. முக்கியமாக மனித நேயம் மிகச் சிறப்பாக வளர்ந்துள்ளது; அறியப்பட்டுள்ளது. ஏழைகளுக்கு உதவுவதும் நோய்வாய்ப்பட்ட நபர் உள்ள குடும்பத்திற்கு உதவுவதும் பரவலாக வளர்ந்து இருக்கின்றதைப் பார்க்கிறோம். அதிலும் எல்லா ஊர்களிலும் நூற்றுக்கணக்கான இளைஞர்கள் இப்படிப்பட்ட பணியை ஆர்வமுடன் செய்வதைக் கண்டு மிக்க மகிழ்ச்சியாக இருக்கும். நிர்ப்பந்தம் ஏற்பட்டால் அன்புள்ளம் தாமரையாக மலரும் என்று நிதர்சனமாகத் தெரிகிறது.

இப்படிப்பட்ட செய்திகளை நாள் இதழ் (Print media) மற்றும் சமூக ஊடகங்கள் (Social media) வாயிலாகப் பரப்பப்பட்டு வேகம் கொண்டு ஆதரவுக்கரங்கள் நீட்டப்படுகின்றன, கண்ணீரைத் துடைக்கின்றன. மேலைநாடுகளிலும் இப்படிப்பட்ட கருணைக் கரங்கள் உதவுவது சமூக ஊடகங்கள் மூலமாக அறியப்படுகிறது.

ஒரு சீன முதியவர் முதிர்வின் காரணமாகப் பிச்சை கேட்கிறார். ஒருவர் தான் உண்டு மீதத்தை அள்ளிப் போடுகிறார். இதனைப் பார்த்துக் கருணை உள்ளம் கொண்ட ஒரு தம்பதியர் தங்கள் இடத்தில் இருந்த உணவில் பாதியை முதியவர்க்குக் கொடுத்தனர். முதியவர் அதனை எடுத்துக் கொண்டு சற்று தூரத்தில் அமர்ந்து இருந்த தன் மனைவியான மூதாட்டிக்கு முதலில் உணவை அளித்தார். அன்புள்ளம் கொண்ட மூத்த தம்பதியினர் தங்களுக்குக் கிடைத்த உணவை நன்றியுடன் பகிர்ந்து உண்டனர். இந்தக் காட்சியைக் கண்ட இளம் தம்பதியினர் தங்களிடம் இருந்த மொத்த உணவையும் ஒரு பையில் போட்டனர், அதனை முதியவர்களிடம் கொடுப்பதற்குச் சென்ற கணவன் உள்ளத்தில் கருணை பொங்கியதால் தன்னிடம் உள்ள பணத்தையும் அந்தப் பையில் போட்டனர், அதனை முதியவரிடம் கொடுத்து வந்தார். முதியவர் மேலும் உணவுப் பொருள்கள் கிடைத்துள்ளன என்று நினைத்து மகிழ்ந்து பையிலிருந்து உணவுப் பொட்டலத்தை எடுத்துப்பார்க்க அதனுள் நிறைய பணமும் இருந்ததைக் கண்டு உணர்ச்சி மிகுந்து கண்ணீர் விடத் தொடங்கினார். அவர் முகம் பார்த்த முதிய பெண்மணி தானும் அழுது கொண்டே ஆதரவாகத் தன் கணவரின் தோள்களைத் தட்டி அமைதிப்படுத்தினார். இந்த Whatsapp காட்சியைப் பார்த்த எந்த நல்லமனிதனுக்கும் கண்ணீர் துளிர்ப்பது இயற்கையே. இப்படிப்பட்ட கருணை உள்ளம் கொண்டவர்களைக் கடவுள் வாழும் இல்லமாக வணங்க வேண்டும்.

இதே போன்ற காட்சிகள் திண்ணமாக மனிதநேயத்தை, உதவும் உள்ளத்தைத் தொண்டு மனப்பான்மையை ஏற்படுத்தித் தொண்டு செய்யத் தூண்டும். தொண்டு மனப்பான்மை உள்ளவர்கள் இயல்பாகத் தம் உள்ளத்தில் கொடைத் தன்மை ஊறிப்பெருக்கெடுக்கும். எனவே தொண்டு செய்ய விரும்புவதே அனைத்து சமுதாய மேம்பாட்டிற்கும் அடிப்படை. அன்பர்களே அனைவரும் தொண்டு உள்ளம் கொண்டு நல்ல தொண்டுகளைச் செய்தும், பொருள்களைச் சேர்த்து அளித்தும் சமுதாயத்திற்கு உதவுங்கள். அதுவும் இப்பொழுது உள்ள சிக்கலான சூழ்நிலையில் அனைவரும் தொண்டர்களாக மாறுவது காலத்தின் கட்டாயம். மாறுவோம், மாற்றுவோம் வளங்கள் சேர்ப்போம்.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***

## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

### (மந்தரை என்னும் கூனி)

**(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)**

மனிதர்களுடைய வாழ்க்கையில் நன்மை தீமைகள் நிகழ்வதும் இன்ப துன்ப அனுபவங்கள் வந்து போவதும் இயற்கை. அதே போல் மனித இனத்தில் நல்லவர்கள் கெட்டவர்கள் நற்செயல்கள் செய்பவர்கள், தப்பான காரியங்களைச் செய்பவர்கள் என எவ்விடத்தும் எக்காலத்தும் பேதங்கள் உருவாவது இயற்கை. தீமைகள் இன்றி நன்மைகள் மட்டும் நிகழ்வதும் துன்பங்களே இல்லாமல் இன்ப அனுபவங்கள் மட்டுமே பெறுவதும் வாழ்க்கையில் சலிப்பை ஏற்படுத்திவிடும். அதே போல் காப்பியங்கள், புராணங்கள், கதைகள் அனைத்திலும் நன்மாந்தர்கள், கீழ்க்குணத்தார் இரண்டும் கலந்தே இருக்க வேண்டும்; இருக்கும். அப்பொழுது தான் காப்பியமோ புராணமோ கதையோ சுவாரஸ்யமாக இருக்க முடியும்.

கம்பராமாயணத்தில் கவிச்சக்கரவர்த்தி கம்பன் இராமாயணக் காப்பியத்திலும் நகரிலும் அறம் திறம்பாதவர்களும் நற்குணம் நிறைந்தவர்களும் இருந்தனர். இது ஒரு கவி மனம் விரும்புகின்ற அமைப்பே ஆகும். இலட்சிய நாடு, நகரம் என்று பெயர் பெற வேண்டும் என்பது கவிச்சக்கரவர்த்தியின் விருப்பமும் ஆகும்.

ஆனால் இராமாயணக் காப்பியத்தை எடுத்துக் கொண்டால் அதில் உத்தமகுணம் படைத்த பல பாத்திரங்கள் இருந்தாலும் தர்மம் தவறி நடக்கின்ற பாத்திரங்களும் உண்டு. அப்படி தருமம் தவறி நடக்கின்ற பாத்திரங்களில் மிக முக்கியமாக அமைந்தவர் இராவணன், கைகேயி, மந்தரை (கூனி), சூர்ப்பனகை ஆகியவர்கள். தீய செயல்களுக்குக் காரணமாக உள்ள நான்கு பேரிலும் இரண்டு கூறுகள் உண்டு. முதற்கூறு மிகச்சிறிய காரணங்களுக்காகவும், காரியங்களுக்கும் பிறர் மேல் தீராத கோபம் கொண்டு, அவரை முழுமையாக அழித்துவிட வேண்டும் என்று முயன்று கேடு செய்பவர்கள் மிகக் கொடியவர்கள் ஆவார்கள். மிகக் கொடிய தண்டனைகளுக்கு ஆளாக்க வேண்டியவர்கள் ஆவார்கள். அவர்களுக்கு மன்னிப்பே கிடையாது. மன்னிக்கவே முடியாதவர்கள்.

ஆனால் இரண்டாவது வகை இயல்பாக நல்ல மனமும் குணங்களும் உடையவர்கள்; சந்தர்ப்ப சூழ்நிலை காரணமாகவும் பிறருடைய துர்ப்போதனைகளில் அறிவைச் செலுத்திய காரணத்தாலும், தீய செயல்களைச் சினம் காரணமாகப் புரிந்து அதனால் ஏற்பட்ட விளைவுகளைக் கண்டு மனம் வாடித் திருந்துகிறவர்கள். அதர்ம காரியங்களைச் செய்கின்ற இரண்டாவது வகை மானுடர்கள், கண்டிப்பாகத் தண்டிக்கப்பட வேண்டியவர்களும் ஆவார்கள். ஆனால் மன்னிக்கக் கூடியவர்கள்.

முதல் வகையான பிறருக்கு அறிந்தே கொடுமை செய்கின்ற அதர்மர்கள் வகையில் கூனியும் சூர்ப்பனகையும் சேர்க்கப்பட வேண்டியவர்கள், சேர்க்கப்பட்டவர்கள், தண்டிக்கப்பட்டவர்கள். அடுத்த வகை தர்மம் தவறியவர்கள்; கூனியின் துர்ப்போதனையால் தெளிந்த பால் போன்ற மனம் கைகேயி தன் மனம் திரிந்து இராமனுக்கும் தசரதனுக்கும் கொடுமை செய்த கைகேயி சேர்க்கப்பட வேண்டியவள். இவள் செய்த தவறுக்காகத் தசரதனை இழந்தது மட்டுமல்லாமல் தன் மைந்தனான பரதனாலும் ஒதுக்கி வைக்கப்பட்டுத் தாய் என்று நினைக்கவும் கூச்சப்பட்டு, குகனுக்கும் அறிமுகம் செய்யவும் தயங்கிய பரதனால் மறைமுகமாகத் தண்டனை பெற்றாள். ஆனால் இராம இலக்குவர் சீதையால் மன்னிக்கப்பட்டாள். அதிகமாக உள்ளதாகப் பாடிச் செல்கிறார்.

அதே போல, சூர்ப்பனகையின் துர்ப்போதனையினால் சீதை மேல் ஆசை கொண்டு சீதாப்பிராட்டியைத் துன்புறுத்திய கொடுமைக்காக இராமனால் தண்டிக்கப்பட்டு இராமபாணத்தால் உயிர் பிரிந்து தண்டிக்கப்பட்டவன் இராவணன். ஆனால் இராமபிரானுடைய பாணத்தினால் மறைந்ததனால் இராமனுடைய அருளால் விண்ணுலகம் எய்தியவன்.

## சூர்ப்பனகை

இராமபிரானைப் பஞ்சவடியில் கண்டு அவர் அழகில் மயங்கி எதிரே இருப்பவன் தேவலோகத் தேவனா இல்லை சிவனால் எரிக்கப்பட்ட மன்மதன் மறுவுருவெடுத்து வந்துவிட்டானா என்றெல்லாம் பலபல

எண்ணியது அவள் மனம். இராமபிரானின் பரந்த மார்பினையும் திடமான கரங்களையும் வீரம் நிறைந்த தோள்களையும் கண்டு மயங்கித் தன்னைத் திருமணம் செய்து கொள்ள வேண்டிக் கையேந்தி நின்றாள். இராமபிரானோ விளையாட்டாக உன்னுடைய ஒரு அண்ணன் அரக்கர் குலத்தின் தலைசிறந்த அரசன் மற்றொருவனோ செல்வத்தின் அதிபதியான குபேரன். அப்படிப்பட்ட நீ என்னை மணப்பது சரியல்ல என்று பலபல பரிகாசமாகவும், விதியின் காரணமாகவும் விளையாட்டாகவும் பேச, சூர்ப்பனகை கோபம் கொண்டு அகன்று தன்னுடைய மந்திர சக்தியால் மிக்க அழகுடைய திருமகளை ஒத்த அழகுடன் மீண்டும் தோன்றினாள். மீண்டும் வந்த சூர்ப்பனகையைக் கண்டு வியந்த இராமன் நீர் யார்? என்று வினவ தம்முடைய குலப்பெருமையைக் கூறித் தன்னைக் காமவள்ளி என்று சூர்ப்பனகை உரைக்க இராமபிரான் அடக்க இயலாது பரிகாசமாகப் பலமாக சிரித்தான். அந்தச் சிரிப்பொலியைக் கேட்டு வெளியே வந்த சீதையைச் சூர்ப்பனகை பார்த்தாள்.

சீதையினுடைய அழகில் பொறாமை கொண்ட சூர்ப்பனகை உடனே தன்னுடைய வஞ்சக உள்ளத்தால் இப்படிப்பட்ட பேரழகி தன் அண்ணன் இராவணனிடம் இருக்க வேண்டியவள் என்று எண்ணம் கொண்டாள். இந்தச் சூழ்நிலையில் சூர்ப்பனகையைக் கண்டித்து வெளியில் நிற்க வைத்துவிட்டுச் சீதையுடன் பர்ணசாலைக்குள் சென்றார். இராப் பொழுது கழிந்து தெளிந்த நிலையில் சீதையைப் போல் ஓர் அழகி இருப்பதால் தான் தன் மேல் இராமன் ஆசை கொள்ளவில்லை. எனவே சீதையை எப்படியாவது தூக்கிக் கொண்டு சென்று இராவணனிடம் சேர்க்க வேண்டும். அப்பொழுது தான் நம் எண்ணம் ஈடேறும் என எண்ணினாள். சீதை தனித்திருந்த சமயத்தில் அவளைக் கவர்ந்து செல்ல முயன்ற சூர்ப்பனகையை, காவல் காத்த இலக்குவன் தன் வாளால் மூக்கறுத்துத் துரத்திவிட்டான். இந்தச் செயலே இராம இராவண யுத்தத்திற்கு ஆதிகாரணம் என்று கம்பர் வர்ணிக்கிறார்.

சூர்ப்பனகை இராமன் பேரிலோ இலட்சுமணன் பேரிலோ சினம் கொள்வதற்கோ, வன்மம் கொள்வதற்கோ காரணம் ஏதுமில்லை. அரக்கர்களுக்கே உரிய குணத்தால் சீதையின் இராமனை அடைய

வேண்டும் என்றால், சீதையைக் கடத்த வேண்டும் என்ற தீய எண்ணம், அதன் விளைவாகக் கிடைத்த மூக்கறுப்பு அதனை ஆதாரமாகக் கொண்டு இராவணனுடைய தூய்மையான மனதில் திரும்பத் திரும்பச் சீதையின் அழகைப் பற்றி வர்ணித்துக் காம எண்ணத்தையும், கபட எண்ணத்தையும் தூண்டிவிட்டாள்.

இந்த விஷயத்தில் இராமன் பேரில் கொண்ட தவறான ஆசை, ஆனால் கேடு பெற்றதோ சீதை. அந்தக் கேடு செய்வதற்குச் சூர்ப்பனகையினுடைய வஞ்சனை உள்ளமும் அடுத்தவர் உள்ளத்தைத் தன்னுடைய பேச்சால் மாற்றக்கூடிய பேச்சாற்றலுமே காரணம். இராம இலக்குவனர் சீதை ஆகியோர் எந்தப் பிழையும் செய்யாமல் இடர்ப்பட்டது சூர்ப்பனகையால் மட்டுமே. இரக்கமும் எவ்வித அடிப்படைக் காரணமும் விரோதமும் இல்லாமல் அடுத்தவர்களுக்குத் துன்பம் நிகழ்விக்கின்ற சூர்ப்பனகை நல்லவர் யாராலும் மன்னிக்கப்பட முடியாத மகா பாவத்தைச் செய்த கொடூர நெஞ்சம் படைத்தவர்.

*(தொடரும்...)*

## ஓம் நமோநாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 9. திருக்கவித்தலம் என்னும் திருக்கபிஸ்தலம்

**(அழ.மெய்யம்மை)**

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்யதேசங்களுள் ஒன்பதாவது திவ்யதேசம், திருக்கவித்தலம், சோழநாட்டுத் திருப்பதிகளுள், இது ஒன்பதாவது திருத்தலமாகும். இத்தலம் திருவையாற்றில் இருந்து கும்பகோணம் செல்லும் பாதையில், தஞ்சாவூர் மாவட்டத்தில் கபிஸ்தலம் என்னும் ஊரில் அமைந்துள்ளது. பாபநாசத்திலிருந்து 3கி.மீ தொலைவில் உள்ளது.

கபி என்றால் வானரம். ஸ்ரீ ஆஞ்சநேயர்கடுந்தவம் செய்து பெருமாளின் தரிசனம் பெற்றார். எனவே இத்தலம் கபிஸ்தலம் ஆயிற்று. இத்தலத்திற்கு கிருஷ்ணாரண்ய க்ஷேத்திரம் என்ற பெயரும் உண்டு.

தமிழ்நாட்டில் உள்ள பஞ்சகிருஷ்ண தலங்களில் இத்தலமும் ஒன்றாகும். ஏனைய நான்கு தலங்கள் திருக்கண்ணபுரம்,

திருக்கோவிலூர், திருக்கண்ணங்குடி மற்றும் திருக்கண்ணமங்கை ஆகும்.

இந்திராஜும்னன் என்னும் மன்னன் மிகச் சிறந்ததிருமால் பக்தன். ஒருநாள் துர்வாச முனிவர், அவரைக் காண வந்தார். வெகு நாழிகை கழித்தும் மன்னன் தனது குடிலை விட்டு வெளி வந்த பாடில்லை. சினங்கொண்ட முனிவர் குடிலுக்குள் நுழைந்து உரத்த குரலில், நீ ஒரு மதம் பிடித்தயானையாகக் கடவாய் எனச் சாபமிட்டார்.

தவறறிந்த மன்னர் சாபவிமோசனம் வேண்டி நின்றார். சினந்தணிந்த முனிவர், நீ யானையாக இருந்தாலும் திருமால் மீது பக்தி கொண்ட கஜேந்திரனாகத் திகழ்வாய். ஒரு முதலை உன் காலைக் கவ்வ, நீ மஹாவிஷ்ணுவை அழைக்க உனக்கு மோட்சமும் சாபவிமோசனமும் உண்டாகும் என்று கூறினார்.

இதே நேரத்தில், கூஹு என்னும் அரக்கன் ஒருவன், அகத்திய முனிவர் குளித்துக் கொண்டிருக்கும் போது, காலைப்பிடித்து இழுத்துத் துன்புறுத்தினான். சினமுற்ற அகத்தியர் அவ்வரக்கனை, நீ ஒரு முதலையாகக் கடவாய் எனச் சபித்தார். அவனும் விமோசனம் வேண்ட, நீ கஜேந்திரன் என்னும் யானையின் காலைக் கவ்வும் காலம் வரும்போது திருமாலின் சக்ராயுதம் பட்டுச் சாபவிமோசனம் உண்டாகும் என்றார்.

இவ்வாறே இத்திருக்கவித்தலத்தில் உள்ள கோவிலின் முன்பு கிழக்குத் திசையில் அமைந்துள்ள கபில தீர்த்தம் என்னும் குளத்தில் கஜேந்திரன் விஷ்ணுவை வழிபட, தாமரைப் பூ எடுப்பதற்காக இறங்க, முதலை கவ்வ, யானை பிளிறி ஆதிமூலமே எனக் கதற, கருடவாகனத்தில் வந்த மகாவிஷ்ணு தம் சக்ராயுதத்தால் முதலையைக் கொன்று யானைக்கு மோட்சமளித்தார்.

இதுதான் இத்தலத்தின் வரலாறு, ஆடிப் பௌர்ணமியன்று இத்தலத்தில் கஜேந்திர மோட்சலீலை நடைபெறுகின்றது.

108 திருத்தலங்களில், இத்தலத்தில் மட்டும் தான் இரண்டு விலங்கினங்களுக்குப் பெருமாள் காட்சிகொடுத்துள்ளார்.

மூலவர் : கஜேந்திர வரதர் என்னும் ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன்
உற்சவர் : தாமோதர நாராயணன்
தாயார் : ரமாமணிவல்லி என்ற பொற்றாமரையாள்
விமானம் : ககநாக்ருத விமானம்
தீர்த்தம் : கஜேந்திர புஷ்கரணி, கபிலதீர்த்தம்
கோலம் : கிழக்கு நோக்கிய புஜங்கசயனக் கோலம்
தலவிருட்சம் : மகிழம்பூ மரம்

சோழர்களால் கட்டப்பட்ட இக்கோவில் ஒற்றைப் பிரகாரத்தைக் கொண்டது. இராஜகோபுரம் 5 அடுக்கு நிலை கொண்டது.

என் அய்யா, காப்பியக் கவிஞர்,நற்றமிழ் நாவலர் கவிஞர் கோ. நா. மீனவனார் திருக்கவித்தலம் குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. திருமழிசையாழ்வார் மட்டுமே இத்தலத்தை ஒரு பாடலால் மங்களாசாசனம் செய்துள்ளார். அப்பாடலில் வரும் ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன் என்ற பெயரே இப்பெருமானுக்கு, முதலைவாய்க்குட் பட்ட யானையைக் காத்த பெருமான் உறைந்திருக்கும் இடம் இக்கவித்தலமே எனக் கூறும் முதலாம் பாடல்.

**ஆற்றங் கரைகிடக்கும் அருளாளன் அணிவயல்சேர்**
**சேற்றில் தவங்கிடக்கும் செந்தா மரையனையான்**
**கூற்றனைய முதலைவாய்க் குட்பட்ட வேழமதை**
**ஊற்றமுடன் காத்தான் உறையுமிடம் கவித்தலமே.**

2. குஞ்சரமாகிய யானையைக் காத்தவைகுந்தவாசன், தஞ்சமென வந்தோரை மட்டுமல்லாது, அவர்களின் தலைமுறையையே காப்பாற்றுபவன், மைபோன்று இருக்கின்ற திருமேனியை உடையவன், தாமரைப்பூப் போன்ற அழகான முகம் கொண்டவன், கொஞ்சி விளையாடி இருக்கின்ற கவித்தலத்தைக் கும்பிட்டுப் போற்றச் சொல்லும் இரண்டாம் பாடல்:

**குஞ்சரம் தனைக்காத்த கோமானாம் வைகுந்தன்**
**தஞ்சமெனவந்தோர்தலைமுறையைக் காப்பாற்றும்**
**அஞ்சன மைமேனிஅரவிந்த முகத்தழகன்**
**கொஞ்சிவரும் கவித்தலத்தைக் கும்பிட்டுப் போற்றுமினே.**

3. மூலமே என்ற கரிமுன் வந்து இடர் தொலைத்து நீலமேகம் போல் நின்றான் என்று பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் என்னும் திவ்யகவி அழகிய மணவாளதாசர் பாடியுள்ளார். அவ்வாறு கரியாகிய யானைக்கு ஆதிமூலம் என்றழைத்தவுடன் உதவியவன், ஆழ்வார்களின் செந்தமிழ்க்கே மகிழ்பவன், விஷத்தை உண்ட சிவபெருமானின் மைத்துனன், பாம்பாகிய அரவணையில் துயில்பவன், அழகுத் திருக்கோலத்தில் வீற்றிருக்கும் கவித்தலத்தைக் கும்பிடச் சொல்லும் மூன்றாம் பாடல்.

**மூலமேஎனவழைக்கமுன்கரிக்கே உதவியவன்**
**சீலமுளஆழ்வார்தம் செந்தமிழ்க்கேதினம்மகிழ்வான்**
**ஆலமுண்டான் மைத்துனனாம் அரவணையான் அழகுதிருக்**
**கோலமுடன் கவித்தலத்தில் கூடினான்கும்பிடுமே.**

4. திருமழிசை ஆழ்வார் தன்னுடையதேன் போன்றபாசுரத்தால் ஊன் உருகப் பாடியதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டசக்கரத்தான் அமர்ந்திருக்கும், தேவர்கள் தொழுதேத்தும் கவித்தலத்தை வணங்கச் சொல்லும் நான்காம் பாடல்.

**தேன்பொதிந்த பாசுரத்தால் திருமழிசை ஆழ்வார்தம்**
**ஊன்உருகப் பாடியதை உவந்தேற்ற சக்கரத்தான்**
**தானமர்ந்த கவித்தலத்தைத் தலைமேலே கொண்டேற்றி**
**வானமரர் தொழுதேத்த வயங்கினான் வணங்குதுமே.**

5. ஆதியும் இல்லாதவன், அந்தமும் இல்லாதவன், தாமரைப்பூப் போன்ற விழிகளை உடையவன், வேதங்களின் உட்பொருளாய் இருப்பவன், மல்லிகை போன்ற மாமணிகள் தழுவிநிற்கும் மைவண்ணத் தோளுடையவன், நம்முடைய தீமைகளை அகற்றுவதற்காகக் கவித்தலத்தைத் தேர்ந்தெடுத்து அமர்ந்திருப்பவனை வணங்கச் சொல்லும் ஐந்தாம் பாடல்.

**ஆதியந்தம் தானறியாஅரவிந்தப் பூவிழியான்**
**ஓதிவரு மாமறையின் உட்பொருளாய் இலங்குபவன்**
**மாதுரமா மணிதழுவும் மைவண்ணத் தோளுடையான்**

**தீதகலக் கவித்தலத்தைத் தேர்ந்தெடுத்தான் வணங்குதுமே.**

மகாபாரதத்தில் ஸ்ரீகிருஷ்ணர் அருச்சுனனுக்கு உபதேசித்தகீதையின் 18 வது அத்தியாயத்தில் உள்ளசரம ஸ்லோகம் எனப்படும் 66வது பாடல்.

**ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ**
**அஹம் த்வாம்சர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமிமா சுசுஹ**

அதாவது, நீ செய்யும் தர்மங்களே மோட்ச உபாயம் என்பதைக் கைவிட்டு, என் ஒருவனையேசித்தோபாயமாகப் பற்றிக்கொள், நான் உன்னை அனைத்து பாவங்களிலிருந்தும் விடுவிக்கிறேன் என்று காவிரி ஆற்றங்கரையான கபிஸ்தலத்தில் பள்ளி கொண்டிருக்கும் கண்ணனும், பாற்கடலில் யோகநித்திரையில் உள்ளமாயவனும் ஆன எம்பெருமான் உபதேசித்த உரையான சரம ஸ்லோகம் என் உள்ளத்தில் சதாசர்வகாலமும் இருப்பதால், என்னை மரண பயமும், கொடும்பாவங்களும், தீயவைகளும் அண்டாமல் இருப்பதற்கான வழியை நான் புரிந்து கொண்டேன் எனக் கூறும் திருமழிசையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல்:

**கூற்றமும் சாராகொடுவினையும் சாராதீ**
**மாற்றமும் சாராவகையறிந்தேன்**
**ஆற்றங்கரைகிடக்கும் கண்ணன் கடல்கிடக்கும்**
**மாயன் உரைக்கிடக்கும் உள்ளத்து எனக்கு.**

***(தொடரும்...)***

---

**24.04.2021 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில்**
**"சிலப்பதிகாரம் அழற்படுகாதை" பற்றி**
**முனைவர் ஜெயமணி உரையாற்றினார்.**

**30.04.2021 அன்று சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக**
**சுவாமிகள் அவர்களின் 81 ஆவது பிறந்த நாள்**
**நிகழ்வு மிகச் சிறப்பாக நடைபெற்றது.**

## பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள்

தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்

### 33

பக்தர் ஒருவருக்கு வயதான தாயார் இருந்தார்; தனது வயோதிக காலத்தில் தேசாந்திரமாகச் சென்று, பிருந்தாவனத்தில் தங்கி, எஞ்சிய வாழ்க்கையைக் கழிக்க விரும்பினார்; இந்த எனது ஆசை நிறைவேற வேண்டும் என்று இறைவனிடம் விண்ணப்பித்துக் கொண்டார்.

அம்மையாரின் இந்த ஆசை பொருத்தமானதாக இல்லை என்று இறைவன் நினைத்தான்; எனவே இவ்வாறு தெரிவித்தான்;

பிருந்தாவனம் செல்ல நினைப்பதெல்லாம் சரிதான்; ஆனால் நீ ஆசையை முழுவதுமாக விட்டு ஒழிக்கவில்லையே; உன்னுடைய மகள், அதாவது உனது பேத்தியின் மீது நீ இன்னும் அளவற்ற பாசமும் பிரியமும் வைத்துக் கொண்டிருக்கிறாய்; நீ எங்கே போனாலும் அந்தச் சிறுமியின் மீது கொண்டுள்ள பந்தமும் பாசமும் உன்னுடனேயே வரும்; நீ பிருந்தாவனத்தில் தனியே தங்கி இருந்தாலும், உன்மனம் உன் வீட்டிலும், வீட்டில் இருக்கும் பேத்தி, பேத்தி என்று தான் சுற்றிக்கொண்டே இருக்கும்; அதனால் உனக்கு எந்தப் பயனும் இல்லை; எனவே பிருந்தாவனம் செல்லும் நினைப்பை விட்டுவிடு.

இவ்வாறு பாட்டியின் பிருந்தாவன யோசனையை விட்டுவிடுமாறு கூறிய இறைவன், அவளுக்குப் பொருத்தமான மாற்று யோசனை ஒன்றைப் பின்வருமாறு சொல்லி வழிகாட்டினான் :

நீ உன் வீட்டிலேயே இருக்கலாம்; உன் பேத்தியோடு பிரியமுடன், பாசமுடன், கொஞ்சிக்குலாவி இருக்கலாம்; பிருந்தாவனத்தில் இருக்கிற ஸ்ரீராதைதான் உன் வீட்டில் பேத்தி உருவத்தில் இருக்கிறாள் என்று பாவனை செய்து கொள்; அவள் மீது மேலும் மேலும் அன்பு செலுத்து; பிருந்தாவனத்துக்குப் போய் வாழ்வதால் என்ன பயன் கிடைக்கும் என்று நீ நம்புகிறாயோ அந்தப் பயன் வீட்டிலேயே உனக்குக் கிடைக்கும்; உன் பேத்தியாகிய சிறுமிக்குச் செய்யும் ஒவ்வொரு காரியமும் பிருந்தாவனத்து ராதைப் பிராட்டிக்கே நீ செய்வதாகப் பாவனை செய்துகொள், அது போதும்...

ஓர் ஊரில் குரு ஒருவர் இருந்தார்; அவர் வீட்டில், சிறு குழந்தைக்கு அன்னம் ஊட்டும் நிகழ்ச்சி வெகு பிரமாதமாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது; குருவின் சீடர்கள் அவரவருக்கும் ஏற்றபடி பல்வகை உணவுரகங்களைக் குருவின் வீட்டில் கொண்டு வந்து சேர்த்தார்கள்; சீடர்களுள் ஓர் ஏழை விதவைப் பெண்ணும் இருந்தாள்; அவளிடம் ஒரே ஒரு பசுமட்டும் இருந்தது; குருவின் வீட்டு விசேடத்துக்காக, தனது காணிக்கைப் பொருளாக அந்த விதவைச் சிஷ்யை ஒரு ஜாடி நிறைய பால் மட்டும் கறந்து கொண்டு வந்திருந்தாள். வீட்டு விசேடத்துக்கு முழுவதுமாய் எவ்வளவு பாலும், தயிரும் தேவைப்படுமோ அவ்வளவு பால் - தயிர் அவள் கொண்டு வருவாள் என்று குரு எதிர்பார்த்தார். ஆனால், சிஷ்யை கொஞ்சம் பால் மட்டும் கொண்டு வந்திருப்பதைப் பார்த்த குருவுக்குக் கோபம் வந்துவிட்டது. அவள் கொண்டுவந்திருந்த பால் ஜாடியைத் தூர வீசி எறிந்தார்; போ, என் முன் நிற்காதே, எங்கேயாவது ஆற்றிலே விழு என்று இரைந்து சத்தம் போட்டார். குருவின் கோபத்துக்கும் சாபத்துக்கும் ஆளாகிவிட்டோமே என்று பயந்த அந்த சிஷ்யை, குருவின் வார்த்தைகளை ஓர் ஆணை போலவே எடுத்துக் கொண்டவளாய், நேரே ஆற்றுக்குப் போனாள்; ஆற்றில் குதித்து மூழ்கிப் போனாள்; அவளுடைய குருபக்தியைக் கண்டு மெச்சிய கடவுள், அவருக்கு நேரே காட்சி தந்தார்; தந்து, இதோ ஒரு தயிர்ப்பானை; இதை எடுத்துக் கொள்; இதில், தயிர் எடுக்க எடுக்கக் குறையாது; வந்து கொண்டே இருக்கும்; இதை உன் குருவிடம் கொடு; அவர் திருப்தி அடைவார் என்றார்.

அந்த விதவை சிஷ்யை மிகவும் மகிழ்ச்சி அடைந்தாள்; கடவுள் கொடுத்த அந்தத் தயிர்ப்பானையை எடுத்துக் கொண்டு ஓடினாள்; குருவிடம் கொடுத்தாள்; எடுக்க, எடுக்கக் குறையாத அந்த அதிசயத் தயிர்ப் பானையைப் பார்த்த குரு ஆச்சரியப் பட்டார்; இது எப்படிக் கிடைத்தது என்று விசாரித்தார்; தன் சிஷ்யையிடம் பின்வருமாறு சொன்னார்;

நீ கடவுளைப் பார்த்தாயா? அந்தக் கடவுளை எனக்கும் காட்டு; இல்லையானால் இந்த ஆற்றிலே குதித்து நான் மூழ்கிச் செத்து விடுவேன்!

இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த கடவுள், அவர்கள் பேசிய இடத்தில் வந்து தோன்றினார்; ஆனால் கடவுள் அந்தக் குருவுக்குக் காட்சி தரவில்லை; எனவே அந்தக் குருவினால் கடவுளைப் பார்க்க முடியவில்லை; ஆனால், கடவுளைப் பார்த்த அந்த சிஷ்யை சொன்னாள்;

கடவுளே, என் குருவுக்கு நீங்கள் காட்சி கொடுக்க வேண்டும்; காட்சி தரவில்லையென்றால், அவர் ஆற்றிலே விழுந்து செத்து விடுவார்; என் குருவாகிய அவர் செத்துப் போன பிறகு நான் மட்டும் எப்படி உயிர் வாழ்வேன்? நானும் ஆற்றிலே மூழ்கி உயிரை விட்டு விடுவேன்.

அந்த விதவைச் சிஷ்யை இவ்வாறு கேட்டுக் கண்ணீர் விட்டதைப் பார்த்த கடவுள், அந்தச் சிஷ்யையைக் காப்பாற்றுவதற்காக, மனம் இரங்கி, அந்தக் குருவுக்குக் காட்சி அளித்தார்.

அதுவும் எப்படி? ஒரே ஒரு நிமிடம், ஒரே ஒரு தடவை காட்சி தந்து மறைந்து விட்டார்.

35

யானையைப் பாருங்கள்; உயிர் வகைகளுள் அது மிகவும் பெரியது; ஆனால் கடவுளைப் பற்றி நினைக்க அதற்கு இயலாது.

36

சமாதி நிலையை அடைந்த பிறகு, நான், ஒரு முறை கங்கைக்குச் சென்றேன்; தர்ப்பணம் செய்யக் கையில் ஜலத்தை அள்ளினேன்; ஆனால், ஜலம் கையில் நில்லாது கீழே ஒழுகிப் போய்விட்டது; சமாதிநிலை அடையப் பெற்றவர்களுக்குத் தர்ப்பணம் போன்ற கர்மங்கள் இல்லை.

37

ஒரு பானையில் வைத்துள்ள மீன், கங்கைக்குள்ளே விடப்படும் பொழுது, அது, எத்தகைய ஆனந்தத்தை அனுபவிக்கிறதோ, அத்தகைய ஆனந்தத்தை சமாதியில் நான் அனுபவிக்கிறேன்.

*(தொடரும்...)*

## மகாராஜா துறவு
### (நூல் அறிமுகம்)

கோவிலூர் திருமடத்தின் வேதாந்த நூல் மரபில் முதல் மூன்று நூல்களான நாநா ஜீவவாத கட்டளை, கீதாசார தாலாட்டு, சசிவன்னபோதம் ஆகிய மூன்றும் வேதாந்த சாஸ்திரத்தையும், தத்துவத்தையும், வேதாந்த மாணவர்கள், முமூட்சுக்களுக்கு அறிமுகப்படுத்தும் நூல்கள், அடுத்து கற்பிக்கப்படுகின்ற மூன்று நூல்கள்: மகாராஜா துறவு, வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம் ஆகியவை. வைராக்கியத்தை உருவாக்கித் திடப்படுத்தவும் ஏற்பட்ட நூல்கள் ஆகும்.

கோவிலூர் மரபு வேதாந்த நூல்களின் நான்காவது நூலாகக் கற்பிக்கப்படும் மகாராஜா துறவு ஸ்ரீமத் குமாரதேவர் சுவாமிகளால் அருளப்பெற்றது. ஒரு நாட்டின் அரசனாக இருந்து அருளாட்சி செய்து வந்த அரசர், ஒரு காலக்கட்டத்தில், வானப்பிரஸ்த வாழ்வை விரும்பி அரசப் பொறுப்பைப் புதல்வர்களிடம் ஒப்புவித்து, தன் மனைவி, தாய், மந்திரி, பிரதானிகள் அனைவரிடமும் விடைபெற்றுக் கொண்டு காடு நோக்கித் தவம் இயற்றச் சென்றார்.

அவரை வழி மறித்து முடிவை மாற்றிக் கொள்ள வேண்டி, உறவினர்களும், மந்திரிகளும், பிரதானிகளும் அழுது புலம்பி வேண்டிக் கொண்டும் தன் வைராக்கியத்தை விடாமல் காடு சென்று, துறவறம் ஏற்று, பலகாலம் தவம் செய்து, முக்தியடைந்தான் என்பது இந்த நூலிலே சொல்லப்படுகின்ற வரலாறு ஆகும்.

இந்தச் சம்பவங்களின் மூலமாக, பந்த பாசங்களைவிட்டு விலகி, பொது ஜனத் தொண்டும், தனக்கான உய்வு பெறத் தவம் இயற்ற வேண்டிய அத்தியாவசிய கருத்துகளையும் இகபர சுகங்களையும் (பூவுலகம் மேல் உலகம் அளிக்கும் அனுபவங்கள்) கொஞ்சமாக விட்டுவிலகி உதறித்தள்ளி, வைராக்கிய சித்தம் பெற வேண்டும். தியானம், தவம் அனைத்திலும் மனத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். பரம்பொருளைப் பற்றி எப்பொழுதும் சிந்தித்துத் தன்னைத் தான் அறிதல் வேண்டும். சத்தியத்தைத் தீர்க்கமாக விசாரித்து, அறிந்து உணர வேண்டும், இந்தச் சாதனைகளாலே ஜீவ பிரம்ம ஐக்கியத்தை அடைய முடியுமென்று போதிக்கின்ற நூல் இதுவாகும்.

## நூல் ஆசிரியர் பற்றிய குறிப்பு

இந்த நூலை அருளியவர் குமாரதேவ சுவாமிகள் ஆவார். இவர் கர்நாடக தேசத்தில் மைசூர்ப் பகுதியை ஆண்ட அரசராவார். ஒரு காலக்கட்டத்தில் அரசாட்சி புரிவதில் விரக்தி அடைந்து துறவேற்பதற்காக அரண்மனையை விட்டுப் புறப்பட்ட குமாரதேவர், ஈஸ்வரர் அருளின் வண்ணம், பேரூர்த் திருமடத்தை வந்து அடைந்தார். அம்மடத்தின் குருநாதராகிய சாந்தலிங்க அடிகளாரைக் கண்டதும், அவரே தாம் தேடி வந்த குருநாதர் என்று உணர்ந்து, அடிபணிந்து வணங்கி, தன்னைச் சீடராக ஏற்றுக் கொள்ள வேண்டி நின்றார். சற்குருவும் சீடனாக ஏற்று, பற்பலவேதாந்த, சித்தாந்த சாஸ்திரங்களை உபதேசித்து அருளினார். பின்னர் சீடன் முறையாகக் கற்க வேண்டியவற்றைக் கற்றுத் தேர்ந்துவிட்டார் என்று எண்ணி ஆசிர்வதித்து அனுப்பி வைத்தார்.

குமாரதேவப் பெருமானும் நெடுந்தூரம் கடந்து வந்து, தற்போது விருத்தாசலம் என்று அழைக்கப்படுகின்ற திருமுதுகுன்றம் வந்தடைந்தார். அங்கே ஆலமரத்துப் பிள்ளையார் திருச்சன்னதியில் அமர்ந்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். அப்போது ஊர்த் தேவதை இளம் பெண் உருக்கொண்டு களைப்படைந்திருந்த குமாரதேவருக்கு ஒரு கிண்ணத்தில் பால் கொடுத்துப் பசியாற்றினார். உடன் நீ இங்கேயே இருந்து தொண்டு செய்து வருவாயாக என்று சொல்லி மறைந்தார். வந்தது ஊர்த் தெய்வம் என்பதை உணர்ந்த குமாரதேவர் விருத்தாசலத்தில் ஆலமரத்துப் பிள்ளையார்க்கு இறைத் தொண்டு செய்து வந்தார்.

இவர் அருளிச் செய்த சாஸ்திரங்கள் பதினாறும் எழுதி முமூட்சுக்களுக்கு உதவினார். இவற்றுடன் விருதாம்பிகை துதியும் எழுதி அருளினார்.

மகாராஜா துறவு - 127
சுத்த சாதகம் - 101
விஞ்ஞான சாரம் - 100
அத்துவித உண்மை - 100
பிரமானுபூதி விளக்கம் - 101

ஞான அம்மானை

வேதாந்த தசாஅவத்தைக் கட்டளை

வேதாந்த சகாரியக் கட்டளை

வேதாந்த நெறி அகவல்

சகச நிட்டை

பிரமசித்தி அகவல்

உபதேச சித்தாந்தக் கட்டளை

ஆகம நெறி அகவல்

பிரமானுப அகவல்

சிவ சமரச வாத அகவல்

தொடர்ந்து பல்லாண்டுகள் அங்கேயே வசித்து ஆர்வமுள்ள சீடர்களுக்கு உபதேசம் அளித்து வந்தார். அத்தகைய சீடர்களில் ஒருவர் சிதம்பரக் கவிராயர் என்று அழைக்கப்பட்டவராவார். அவருடைய குருபக்தி, கிரகிக்கும் திறமை அதனாலே வளர்ந்த அறிவுத்திறன் ஆகியவற்றைப் பார்த்து மேலும் கற்பதற்காக அவரைப் பேரூர் சாந்தலிங்க சுவாமிகளிடம் கொண்டு சேர்க்க விரும்பினார். ஆனால் குருமகான் எனக்கு அத்தகைய சீடர்கள், வாரிசுகள் நிறைய இருக்கிறார்கள். அதனால் உன்னுடைய வாரிசாக நீயே திரும்ப அழைத்துச் செல். ஞானத்தைஅருளிச் செய் என்று, திருப்பி அனுப்பிவிட்டார். இந்த சிதம்பர கவிராயர் தான் பின்னாளில் குமாரதேவர் மூலம் ஞானம் பெற்றுச் சாந்தலிங்க சுவாமிகள் அருளிச் செய்த நான்கு சாஸ்திரங்களுக்கும் (வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், கொலை மறுத்தல், அவிரோத உந்தியார் ஆகிய நூல்களுக்கும்) வியாக்யானம் எழுதி அருளியவர் ஆவார்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### மடி இன்மை

(சோம்பல் இல்லாமை)

1. **குடிஎன்னும் குன்றா விளக்கம் மடிஎன்னும்**
   **மாசுஊர மாய்ந்து கெடும்.**

   குடிஎன்னும் - குடும்பம் என்னும்; குன்றா விளக்கம் - அணையாத

விளக்கு; மடி என்னும் - சோம்பல் என்னும்; மாசு ஊர - குற்றம் சேர்ந்தால்; மாய்ந்து கெடும் - ஒளி குறைந்து அழிந்து போகும்.

குடும்பம் என்னும் அணையாத விளக்கு, சோம்பல் என்னும் குற்றம் சேர்ந்தால் ஒளி குறைந்து அழிந்து விடும்.

மாசு - குற்றம்; இருள்.

**2. மடியை மடியா ஒழுகல் குடியைக்**
**குடியாக வேண்டு பவர்.**

மடியை - சோம்பலை; மடியா ஒழுகல் - சோம்பலாகவே எண்ணி ஒழுகுதல்; குடியை - குடும்பத்தை; குடியாக - குடும்பமாக; வேண்டுபவர் - விரும்புபவர்.

குடும்பத்தைக் குடும்பமாகவே விரும்புபவர் சோம்பலைச் சோம்பலாகவே எண்ணி ஒழுகுதல் வேண்டும்.

சோம்பலுக்குச் சோம்பல் கொடுக்க வேண்டும்.

**3. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த**
**குடிமடியும் தன்னினும் முந்து.**

மடி - சோம்பலை; மடிக் கொண்டு ஒழுகும் - தன்மடியிலேயே கொண்டு ஒழுகுகின்ற; பேதை - அறிவில்லாதவன்; குடி - குடும்பம்; மடியும் - அழியும்; தன்னினும் முந்து - தன்னினும் முந்தியதாக.

சோம்பலைத் தன் மடியில் கொண்டு ஒழுகுகின்ற அறிவில்லாதவனின் குடும்பம் அவன் அழிவதற்கு முன்னேயே அழிந்துவிடும்.

மடி - சோம்பல்; இடம்; அழிவு

**4. குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து**
**மாண்ட உஞற்றுஇல வர்க்கு.**

குடிமடிந்து - குடும்பம் மடிந்து; குற்றம் பெருகும் - குற்றமும் பெருகும்; மடிமடிந்து - சோம்பலில் வீழ்ந்து; மாண்ட உஞற்று - சிறந்த முயற்சி; இலவர்க்கு - இல்லாதவர்க்கு.

சோம்பலில் வீழ்ந்து சிறந்த முயற்சி இல்லாதவர்க்குக் குடும்பம் மடிந்து குற்றமும் பெருகும்.

மடி - சோம்பல்; மடிந்து - வீழ்ந்து.

**5. நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்**
**கெடுநீரார் காமக் கலன்.**

நெடுநீர் - கால நீட்டிப்பும்; மறவி - மறதியும்; மடி - சோம்பலும்; துயில் - தூக்கமும்; நான்கும் - என்ற இவை நான்கும்; கெடுநீரார் - அழியும் இயல்பை வேண்டுபவர்; காமக் கலன் - விரும்பும் மரக்கலம் ஆகும்.

கால நீட்டிப்பு, மறதி, சோம்பல், தூக்கம் என்னும் நான்கும் அழியும் இயல்பை வேண்டுபவர் விரும்பும் மரக்கலம் ஆகும்.

**6. படிஉடையார் பற்றுஅமைந்தக் கண்ணும் மடியுடையார்**
**மாண்பயன் எய்தல் அரிது.**

படிஉடையார் - நிலத்தை ஆளுபவரின்; பற்று அமைந்தக் கண்ணும் - துணை அமைந்தாலும்; மடியுடையார் - சோம்பல் உடையவர்கள்; மாண்பயன் - பெருமையான பயனை; எய்தல் அரிது - அடைதல் அரிதாகும்.

நிலம் ஆளுவோரின் துணை அமைந்தாலும் சோம்பல் உடையவர்கள் பெருமையான பயனை அடைதல் அரிதாகும்.

**7. இடிபுரிந்து எள்ளுஞ்சொல் கேட்பர் மடிபுரிந்து**
**மாண்ட உஞற்றுஇ லவர்.**

இடிபுரிந்து - இடித்துக் கூறப்படும் நிலை பெற்று; எள்ளுஞ்சொல் கேட்பர் - இகழ்ந்து சொல்லும் சொல்லையும் கேட்பர்; மடிபுரிந்து - சோம்பலை விரும்பி; மாண்ட உஞற்று இலவர் - சிறந்த முயற்சி இல்லாதவர்.

சோம்பலை விரும்பியதால் சிறந்த முயற்சி இல்லாதவர் பிறரால் இடித்துக் கூறப்படும் நிலைபெற்று இகழ்ந்து சொல்லும் சொல்லையும் கேட்பர்.

**8. மடிமை குடிமைக்கண் தங்கின் ஒன்னார்க்கு**
**அடிமை புகுத்தி விடும்.**

மடிமை - சோம்பல்; குடிமைக்கண் தங்கின் - குடும்பத்தை உடையவனிடம் தங்கினால்; ஒன்னார்க்கு - பகைவருக்கு; அடிமை புகுத்திவிடும் - அடிமையாகும் தன்மையைத் தந்து விடும்.

குடும்பத்தை உடையவனிடம் சோம்பல் தங்கினால் அது பகைவருக்கு அடிமையாகும் தன்மையைத் தந்துவிடும்.

**9. குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்**
**மடியாண்மை மாற்றக் கெடும்.**

குடியாண்மையுள் வந்த குற்றம் - குடும்பத்தை ஆளுகின்ற தன்மையால் வந்த குற்றங்கள்; ஒருவன் மடியாண்மை - ஒருவனை ஆளுகின்ற சோம்பலை; மாற்றக்கெடும் - மாற்றினால் கெடும்.

ஒருவனை ஆளுகின்ற சோம்பலை மாற்றினால் அவன் குடும்பத்தை ஆளுகின்ற தன்மையில் வந்த குற்றங்கள் கெடும்.

**10. மடிஇலா மன்னவன் எய்தும் அடிஅளந்தான்**
**தாஅயது எல்லாம் ஒருங்கு.**

மடிஇலா மன்னவன் எய்தும் - சோம்பல் இல்லாத மன்னவன் அடைவான்; அடிஅளந்தான் - அடியால் உலகத்தை அளந்தவன்; தாஅயது எல்லாம் ஒருங்கு - தாண்டிக் கடந்த பரப்புடைய உலகை எல்லாம் ஒருங்கே.

அடியால் உலகத்தை அளந்தவன் தாண்டிக் கடந்த பரப்புடைய உலகை எல்லாம் சோம்பல் இல்லாத மன்னவன் ஒருங்கே அடைவான்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம்
## கீரனைக் கரை ஏற்றியது

சோமசுந்தரப் பெருமானின் நெற்றிக் கண்ணின் நெருப்பாலே தாக்குண்ட நக்கீரன் பொற்றாமரைக் குளத்துள் விழுந்து பெரிதும் துன்பப்பட்டான். கபில பரணராகிய புலவர்களெல்லாம் அதைக் கண்டு பொறுக்கமாட்டாமல் நடுங்கினார்கள். நக்கீரன் இல்லாது ஏனைய புலவர் சேர்ந்த இச் சங்கம் வேந்தன் இல்லாத குடியும், நடுநாயக மணியில்லாத மாலையும், ஞானம் இல்லாதார் கல்வியும் போன்றது. சொல்லுக்கும் பொருளுக்கும் சொரூபமாக விளங்கும் சோமநாதப்

பெருமானுடன் வாதுசெய்த பிழை பெரும்பிழை; ஐயோ! இப் பிழை தீர்வது எப்படி? இனி நாம் உய்வது அரிது, என்று எண்ணிய புலவர் எல்லாரும் மனம் மருகினர்.

சிவபெருமான் தமது திருக்கைலாச மலையைப் பெயர்த்த இராவணனும் தன் கையிலே வீணையேந்தி இனிய இசை பாடத் திருவுளம் கனிந்து அவன் இழைத்த பிழையை மன்னித்த தோடல்லாமல் அவனுக்குத் தேரும் வாளும் ஈந்தருளினாரல்லவா? ஆதலால் சிவபெருமான் இரங்கினால் நக்கீரன் செய்த பிழையும் நீங்குவது உறுதியே என்று தங்களுக்குள் சொல்லி அமைதியுற்றனர் உடனே, சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளில் விழுந்து துதி செய்தனர். சிவபெருமானே! மால்விடையேறிய அருளாளனே! எவ்வுயிர்க்கும் அம்மையப்பனாய் விளங்கும் தண்ணியனே! நக்கீரன் வித்தியா கருவத்தினால் மதியிழந்து தேவரீரது திருப்பாடலைப் பிழை என்று கூறி விதண்டாவாதம் செய்தான். அதனால் தங்கள் திருக்கண் தீக்கு இலக்கானான். வாவியுள் விழுந்து அல்லற்படுகிறான். இனி தேவரீரே பெருங்கருணை காட்டிக் கீரனது பிழையை மறந்து மன்னித் தருள்புரிய வேண்டும், என்று வெகுவாகக் கெஞ்சி முறையீடு செய்தனர்.

புலவர்களின் கூட்டு விண்ணப்பத்திற்குப் பெருமான் செவிசாய்த்தார். திருவருள் தண்ணளி காட்டத் திருவுளம் கொண்டார். தனது தேவி மீனாட்சியம்மையாருடன் எழுந்தருளி வந்தார். நக்கீரன் அழுந்திக் கிடந்த பொற்றாமரைத் தடாகத்தருகே சென்று புலவர் கூட்டத்துடன் சேர்ந்து கொண்டார். இப்போது தனது குளிர்மையான அருட்கண்ணால் நோக்கியருளினார். உடனே நீருக்குள் முழுகியிருந்த கீரன் தனது கருவிகரண இந்திரியங்ளெல்லாம் சிவபெருமானுடையன ஆனான். சிவ பெருமானது பெருங்கருணைத் தடங்கடலில் ஆழ்ந்து பக்திமயமானான். ஜகன் மாதாவாகிய ஞானப் பூங்கோதையம்மையாரின் கூந்தலுக்கும் பழுது சாற்றிய எனது கொடிய குற்றத்தை அந்தக் கடவுளைத் தவிர வேறுயார் பொறுப்பார்கள்! என்று கருதி வியந்தான்.

உடனே திருக்காளத்தியப்பர் மீது கைலைபாதி காளத்தி பாதி அந்தாதி என்னும் பாமாலை தொடுத்துச் சூட்டினான். நீரிலிருந்து கீரன்

அடியவர்க்கெல்லாம் திருவடிப்புணை தந்தருளும் தயாபரனான சிவபெருமான் அவ்வந்தாதி மாலையைத் திருச்செவி சாற்றி நேரே நெருங்கி வந்து நக்கீரனுடைய கையைப் பிடித்துக் கரையேற்றியருளினார்.

தனக்குக் கைதந்து கரையேற்றியருளிய கருணாநிதியான சோமசுந்தரப் பெருமானையும் மீனாக்ஷியம்மையாரையும் உளமார வணங்கினான் கீரன். தீமை செய்தவருக்குக் கோபத்தையும் நன்மை செய்தவருக்கு அருளும் காட்டுவது என்ற இறைவன் தன்மையைப் பொருளாக அமைத்து, செய்யுள்மாலை கோர்த்தான். ஐயோ! வருந்தினேன், எளியேனுக்கு அருள் புரிக என்று வேண்டினான். இறைவனது கோபத்தையும் பிரசாதத்தையும் குறித்துக் கோபப் பிரசாதம் என்ற வசந்த மாலை சூட்டி அம்மையப்பரைப் போற்றினான். பின்பு சிவபரம் பொருளைப் புகழ்ந்து, பெருந்தேவபாணி, திருவெழு கூற்றிருக்கை என்னும் செய்யுள் மாலைகளால் போற்றிப் பலமுறை விழுந்து வணங்கினான்.

சோமசுந்தரப் பெருமான் தம்மைத் துதித்த நக்கீரனுக்குத் திருவருள்புரிந்து, முன்னைப் போலவே நீ உன்னை நன்கு மதித்த புலவர் கூட்டத்தில் இடம் பெறுவாயாக, என்று அருளிச் செய்து மீனாட்சியம்மையாரோடு மறைந்து திருக்கோவிலுள் அமைந்திருந்தார்.

நக்கீரனும் ஏனைய புலவர்களும் சங்க மண்டபம் சேர்ந்தனர். அங்கு தொங்கிக் கொண்டிருந்த செம்பொற் கிழியை அறுத்தெடுத்து தருமியான ஆதிசைவ அந்தணனுக்குக் கொடுத்தனர். மற்றும் மேற்கொண்டு பாண்டிய வேந்தனைக் கொண்டும் வரிசைகள் கொடுக்கச் செய்து அனுப்பினர். புலவர்கள் அனைவரும் பின்னர் கல்விச் செல்வர்களாகவே வாழ்ந்தனர்.

சண்பகமாறன் சோமசுந்தரப் பெருமானையும் மீனாட்சியம்மையையும் அனுதினம் தரிசித்து வணங்கி வந்தான். சிவமே பொருள் என்று தெளிந்த நல்லுணர்வோடு பல திருப்பணிகள் செய்து சிறப்புற வாழ்ந்து வந்தான்.

***(தொடரும்...)***

# பட்டினத்தாரின் மகன் - தாய் பற்று

**பா.அசோக்குமார்**
மதிப்பியல் தலைவர்,
திருப்பாதிரிப் புலியூர்ச் சித்தாந்தச் சைவநெறி மன்றம்,
**கடலூர் - 607 002.**

புராணப் பாங்கின்படி உலகின் பெருஞ்செல்வத்திரளான சங்கநிதி, பதுமநிதி இரண்டும் குபேரனிடம் இருந்தன. இதனால் சிவபக்தர்களுக்குச் செல்வம் தரத்தட்டுப்பட்டால் அந்தச் சிவபெருமானே குபேரனிடம் கேட்டுப் பெறும் நட்புக்குரியவர்களாக இருந்தனர்.

இந்த நட்பு பற்றி திருநாவுக்கரசர் பாண்டிப்பதிகளில் ஒன்றான திருப்புத்தூரில் தனது திருத்தாண்டகத்தின் ஐந்தாவது பாடலில்

***தருமருவு கொடைத்தடக்கை யளகைக் கோன்தன்***
***சங்காத்தி ஆரூரில் தனியானைக் காண்***
***திருமருவு பொழில் புடைசூழ் திருப்புத் தூரில்***
***திருத்தளியான்காண் அவனென் சிந்தை யானே***

என்று பாடினார்.

தரும பரிபாலனம் செய்வதில் தன்னேரில்லாதவர்களாகத் திகழும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களாம் நகரத்தார்களைச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் **மன்னர்பின்னோர்** எனப் பாராட்டுவார். அந்த அளவிற்குச் செல்வக்குவியல் உள்ளவர்கள். பஞ்சம் வந்த போது சோழப் பேரரசிற்கே பொருளுதவி வழங்கியதாக வரலாறு கூறுகிறது. இத்தகு மரபில் குபேரன் பிறப்பதான கதைக் குறிப்பு ஒன்று உண்டு.

நட்பிற்குரிய சிவனும் குபேரனும் ஒரு முறை வானத்தில் உலா வந்தபோது குபேரன் பூவுலகத்தின் அழகிய ஒரு நகரின் வனப்பையும் வளத்தையும் கண்டு மயங்கியதை உணர்ந்த சிவன், குபேரனை அந்நகரிலேயே பிறந்து வளர்ந்து வாழ்ந்து வானோர் உலகு வர வரம் தந்தபடிக் குபேரன் காவிரிப்பூம் பட்டினத்தில் வணிகர் குலத்தில் திருவெண்காடராகப் பிறக்கின்றார். அவரே பட்டினத்தார் ஆவார்.

சிவகலை என்பவரை மணந்து வாழும் அவருக்கு மருதவாணரே மகனாகக் கிடைக்க, மகனார் மருதவாணர் குலமரபின்படி கடல் வணிகம் செய்து திரும்பும் போது கொண்டுவந்த வரட்டிகளால் வீட்டைவிட்டு வெளியேறும் சூழலில் ஒரு பெட்டியைத் தந்துவிட்டுப் போய்விட்டார். அப்பெட்டியைத் திறந்து பார்க்கையில் காதற்ற ஊசியும் வாராதுகாண் கடை வழிக்கே என எழுதப்பட்ட நறுக் கோலையைக் கண்ட திருவெண்காடருக்கு புது ஞானம் பிறந்தது. அந்தக் கணமே அனைத்தையும் துறந்து துறவறத்தைச் சுகமாகப் பூண்டார். இவரது துறவு புத்தரின் துறவைப் போன்று மேலானது எனலாம்.

துறவு நிலையில் அருளியதும் உலகியலும் திருவெண்காடராம் பட்டினத்தாருக்குப் பல அனுபவங்களைத் தந்தன. முற்றும் துறந்தவராகி விட்டாலும் தாய்ப்பாசம் மட்டும் விடாதவராய், தன் தாய் இறந்தபோது சிதைக்குத் தீ மூட்டுங்கால்

முன்னையிட்ட தீ முப்புரத்திலே
பின்னையிட்ட தீ தென்னிலங்கையில்
அன்னையிட்ட தீ அடி வயிற்றிலே
யானுமிட்ட தீ மூள்க மூள்கவே

என ஞானமாய்ப் புலம்பினார்.

சிவன் முப்புரத்தினை எரித்து மக்களைக் காத்தார். சிவனது அம்சமான ஆஞ்சநேயர் இலங்கையை எரித்து அரக்கரால் வந்த துன்பத்தைப் போக்கிக் கொண்டார். இவற்றைக் கூறிய பட்டினத்தார் தாயையும் தன்னையும் நொந்து கொள்ளும் விதமாக என்னைக் கருவில் சுமந்து சலிப்படைந்த தாயினது நோயாம் துன்பத்தீயும் அத்தீயினுக்கு இரையாய் அவளுக்குச் சேயாய் பிறக்கத்துன்பம் தந்த எனது பிறப்பாம் தீயும் அழிந்தொழியட்டும் என நிலையாமையை எண்ணியே சிதைக்குத் தீ வைத்தார் என்பதே இந்த இடத்தில் உணரத் தகும் சீரிய கருத்தாகும்.

இதனை அவரே பின்னர் ஓரிடத்தில் மாதா உடல் சலித்தாள் வல்வினையேன் கால் சலித்தேன் வேதாவும் கைசலித்து விட்டானே - நாதா இருப்பையூர் வாழ்சிவனே! இன்னுமோர் அன்னை கருப்பையூர் வாராமல் கா

எனப்பாடுவதால் கரு மூலத்தீயாம் துன்பம் தனக்கும் தாய்க்கும் இனி இல்லாமல் காக்க வேண்டினார் என்றால் பட்டினத்தாரின் தாய்ப் பற்றை என் என்பது!

இவ்வாறு தாயையும் தன்னையும் கருமூலத் தீயிலிருந்து காக்க வேண்டியே பாடலின் முதல் இரண்டடிகளில் சிவன் முப்புரம் எரித்து மக்கட்டு நன்மை செய்ததாகக் கூறியதைத் தாயைக் காக்கச் செய்யும் சிவனது அம்சமான மாருதி அரக்கரது தீயால் தன்னையே காத்துக் கொண்டதாகக் கூறியதைப் பட்டினத்தார் தன்னைக் காக்கச் செய்யவும் வேண்டும் என்பதாக இருப்பையூர்ச் சிவனை வேண்டினார்.

வியாபாரத்தில் இருப்பு கட்டுவதே முக்கிய மானதாகும். பட்டினத்தாரும் நகரத்தார் மரபுப்படி நிலையாமை ஆகிய இருப்பைத் தாய்-மகனாம் எங்கட்குத் தரவேண்டும் என்பதையே கருப்பையூர் வாராமல்கா என்றார்.

அபிராமிப்பட்டரும் நீ தாய் நான் மகன் அல்லவோ என அபிராமியை வேண்டியவாறு சக்தி அம்சமான தாய்க்கு ஈடு இணை உண்டோ? அதனால் தான் மணிவாசகரும் ஆனமாக்களை வளர்த்தெடுத்த பெய்வளை எனத் திருவெம்பாவையில் பாடினார்.

என்னே பட்டினத்தார் தாய்ப்பற்று! துறவறத்திலும் தாயை நினைத பட்டினத்தாராம் மகன் பற்று!!

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்